உ
ஹரி ஓம்.
ஸ்ரீ வீரபோக வசந்தராய நம.



கலியுகமகத்துவமாகிய

# காலக்கியானம்.



இவை
போத்தலூர், வீரப்பிரம அவர்களால் தெலுங்கு பாஷையில
அருளிச்செய்ததை
திருவநகரில் வசிக்கும் திருக்கன்னையர் குமாரர்
அனந்த சுப்பையனால்
தமிழில் மொழிபெயர்க்கப்பட்டு
மதுரை நியூஜர்மனியில் க. ருமதுரைபடையாச்சியார் புத்திரர்
வீரப்படையாச்சி அவர்களால்
1915-ஞ அக்டோபர் மீ 4உ பீட்டர் மேஸ்டிரியார்
ஸ்ரீ கிர்ஷ்ணவிலாச அச்சுக்கூடத்தில் பதிப்பித்த பிரதிக்
கிணங்க இராமநாதபுரம் ஜில்லாவைசார்ந்த
கல்வி நகரில் வசிக்கும்
கனம் அ. சோலை அவர்களால்
பரிசோதித்து
ஷை ஜில்லா, தேவட்டில் வசிக்கும் காலஞ் சென்ற
ம-ா-ா-ஸ்ரீ சங்கிலியார் குமாரர்
ஆறுமுகம் அவர்களின்
பொருளுதவியை மேற்கொண்டு
கொழும்பு, மீனம்பாள் அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.
1920.

உ

ஸ்ரீ தேவி சகாயம்.

# கலியுகத்தின் மகத்துவமாகிய

# ஸ்ரீ காலக்கியானம்.

## காப்பு வெண்பா.

நலலவிருப்பகரை நாளதோறுமேதொழுதால்
அலலல் வினையெல்லா மகலுமே—சொலலரிய
வீரவசநதமா மேருவெனுமிப்பொருளாம
சிதரினை யெபபொழுதுந்தேற்று.

## துதி

ஸ்ரீ சாம்பசிவ மூர்த்தியே நம
ஸ்ரீ வீரபோக வசந்தராய நம:
ஸ்ரீ சிதம்பர தீக்ஷதரே நம.
ஸ்ரீ இராமயோகி ஐயரே நம
ஸ்ரீ கனகதுர்க்கியம்பாள் நம:

## ஆசிரிய விருத்தம.

சீர்பெற்ற உலகமெலாம இருளறறு தெளிபெற்ற
ஸ்ரீ விஷ்ணு அவதாரமாய
ஜெகதலம் புகழுபெறற காஷ்மீரதேசத்தில்
இலர்தம்பாள் கெர்ப்பமதனில்
பேர்பெற்று வாழ்கவே பிள்ளையாய சென்மித்து
பூமிதனிலே பிறந்து
பெரியோர்களாதரவில் சம்பன்னபாஷைகள
பிறபலயமாய படித்து
பார்பெற்ற மகேந்திரகிரி பர்வதத்தடியினில்
பட்டண மமைத்தபின்பு
பாராசர் பெறறமணி முடிசூடி குடையினில்
பாருலகை யாளுமன்னன
கார்பெறற முகில்வண்ண வீரபோகவசநத
கருணைகடாக்ஷ பொருளை
கண்டவா படிததவர் கருத்தினில் நினைததவா
கதிர்போல வாழ்குவாரே

# சரித்திர வரலாறு.

ஸ்ரீ கௌதம தீர்த்தத்திற் கடுத்த கேதாரவனத்திலே இருக்கும் குகைக்குள்ளாக அனேக காலம் தவசாய் நின்ற மஹாத்துமாக்கள் ஸ்ரீ சிதம்பரதீக்ஷதர்க்கும் ஸ்ரீ ராமயோகி ஐயருக்கும் ஸ்ரீ வீரபிர்மத்தினுடைய சரித்திரத்தை உபதேசித்து நீங்கள் இந்த உலகத்திலிருக்கிறவர்களுக்கு போதித்துப் பிரசங்கம் செய்யுங்களென்று ஆக்கியாபிக்க அவ்வண்ணமே ஸ்ரீ சிதம்பர தீக்ஷதரும் ஸ்ரீராமயோகி ஐயரும் துன்முகி ௵ வைகாசி ௴ 2௳ திரயோதசி வியாழக்கிழமை இந்த சுபதினத்தில் இந்த சௌசன்னிய பத்திரிகையை பிரசுரித்தார்கள். ஸ்ரீ கணபதியேநம.

ஓர் நாள் தேவேந்திர மஹாராசவானவர் முப்பத்து முக்கோடி தேவர்களேயும், நாற்பத்தெண்ணுயிரங்கோடி ரிஷிகளேயும், சகலமான தேவர்கள் முதலான யாவர்களேயும் தம்முடைய தெய்வசபைக்கு அழைப்பித்து தேவர்களேப்பார்த்து ஓர் வசனம் சொல்லுகிருர்.

ஒ தேவர்களே பூலோகத்திலே துஷ்டர்கள் தனதான்யசம்பத்துகளால் கற்வமடைந்து பெரியோர் சிறியோரென்று மரியாதையில்லாமல் வம்புதும்புகளான வார்த்தைகள்பேசுகிறதும் ஜனங்களே தூஷணிக்கிறதும் இப்படி துஷடர்கள்அதிகரித்து தானதருமங்கள் முதலான விஷயங்களேயும் நல்லோர்கள், பெரியோர்கள், பத்தினிமார்க்மாயிருக்கிற தாய்மார்களேயும் எண்ணுமல் நடக்கிறபடியால் பூமியில் பாவம் மூன்றுபங்கும், புண்ணியம் ஒரு பங்குமாயிருக்கிறது. அதனுலே பூமி தேவியானவள் பாரம் சுமக்கமாட்டாமல் முறையிடுகிருள். இதற்கு என்னசெய்வோமென்று தேவர்களேப் பார்த்து தேவேந்திரமகாராசா கேள்க்க அதற்கு தேவர்களெல்லோரும் ஒருமித்துச் சொல்லுகிருர்கள் வாருங்களய்யா தேவேந்திரமகாராசாவே தங்களுக்குத் தெரியாதயோசனைக்கு எங்களிடத்தில் என்ன இருக்கிறதோ. ஆனுல் எங்களுக்கு தெரிந்தவரைக்கும் சொல்லுகிறோம்.

இந்த கலியுகத்தில் இதுவரையில் பாவம் அதிகமில்லாமலிருந்து இப்பொழுது துஷ்டர்கள் அதிகமானபடியால் பாவம் அதிகமாச்சுது ஆகையினுலே அந்த துஷ்டர்களேசம்மாரஞ்செய்ய மும்மூர்த்திகளாலே யாகுமேயொழிய மற்றபேருகளாலே யாகாது. அப்படியிருப்பதால் உங்களுடைய திருவுளத்துக்கேற்றபடியே நடவுமையாவென்று தேவர்கள் சொல்லக்கேட்டு தேவேந்திரமகாராசா சொல்லுகிருர். ஒ தேவர்களே பூமியிலே துஷ்டர்கள் அதிகமானுல் அவர்களே சம்மாரஞ்செய்து

பூமி பாரம் தீர்க்க ஸ்ரீ மகாவிஷ்ணுவே அவதாரம் செய்யவேண்டுமே தவிரவேறில்லை.

ஈாமந்த ஸ்ரீமந் நாராயணரிடத்தில் போய் சொல்லிக்கொள்ளு வோம்வாருங்கள் தேவர்களே என்றுசொல்ல அப்பொழுதுதேவர்களெல் லொரும் தேவேந்திரமகாராசா முதலானவர்களும் கூடிக்கொண்டு வை குந்தம்போய் ஸ்ரீமகாலட்சுமி மனோகரனை ஸ்ரீமந்நாராயணமூர்த்தியைக் கண்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரஞ்செய்து சுவாமி பரமபுருஷா, அகி லாண்டநாயகா, ஆதிபரபிரமவஸ்துவே, என்று தேவேந்திரன் முதலான தேவர்களெல்லோரும் ஸ்தோத்திரஞ்செய்துக்கொண்டு நிற்கையில், ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் தேவேந்திரனையும், தேவர் களையும் பார்த்து நீங்கள் என்ன காரணநிமித்தமாய் இவ்விடத்திற்கு வந்தீர்களென்று திருவுளம்பற்ற தேவர்கள் சொல்லுகிறார்கள். ஓ பரம் புருஷா, பரப்பிர்மவஸ்துவே, ஆதிமூலமே, அநாதரக்ஷகா, சருவலோக தயாபரமூர்த்தியே. பூலோகத்திலே கலியுகமானபடியால் துஷ்டர்கள் அதிகமாகி மதோன்மத்தராய் கர்வமடைந்திருக்கிறார்கள். அதுவுமல் லாமல் சர்வவல்லமையுடைய ராச்சியமாயிருக்கிறது. சிலராசர்கள் நீதி யில்லாமல் துர்நீதியாய் ராச்சியமாளுகிறபடியால் பூலோகத்தில் பாவம் மூன்று பங்கும் புண்ணியம் ஒரு பங்குமாய் நடந்துவருகிறது அப்படி யிருப்பதால் பூமிதேவிபாரம்பொறுக்கமுடியாமல் முறையிடுகின்றனன்.

இந்த கலியுகப்பிமாணம் நாலுலக்ஷத்து முப்பத்தீராயிரவருஷம் அதில் யிதுவரையில் சென்றது நாலாயிரத்தி துலாயிரமானதால் அதற்குள் பாவம் மூன்றுபங்கும் புண்ணியம் ஒருபங்குமானபடியால் பூமி தேவி பாரம்பொறுக்கமுடியாமல் முறையிடுகிறாள் என்று தேவர்கள் சொல்ல அதுகேட்டு வைகுண்டநாதராகிய ஸ்ரீமன் நாராயணமூர்த்தி யானவர் திருவுளம்பற்றுகிறார்.

தேவேந்திரனே நீங்கள் சொல்லுகிறது சரிதான் ஆனால் பூலோகத்திலே சென்மித்து துஷ்டர்களை சம்மாரஞ்செய்து பூமிபாரம் தீர்க்கிறோம் நீங்கள் அதைப்பற்றி கிலேசப்படவேண்டியதில்லையென்று சொல்லி பகவானான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும் அப்பொழுது தானே ஸ்ரீசாம்பசிவனுக்கு அறிக்கைசெய்ய அவரும் கருணைகூர்ந்து பிர்மதேவ ரை வரவழைத்து மும்மூர்த்திகளும் கூடியிருக்கிறபொழுது ஸ்ரீமந் நாரா யணமூர்த்தி சொல்லுகிறார். ஓய் புண்ணியபுருடரே நான் துஷ்ட நிக் கிரக சிஷ்டபரிபாலனம் பண்ணி பூமிபாரம்தீர்க்கும் பொருட்டாய் பூலோகத்திலேபோய் காஸ்மீரதேசத்து இராசாவாகிய தர்மராசாவம்சி சத்திலே பிரந்திராகின்ற ஜெயசிங்கு மகாராசானுக்கு மனைவியாகிய நீ லர்தமையம்மாளென்கிற பதிவிரதை வயிற்றிலே பிறக்கிறோம். நீங்க

அப்போது அந்தப்பாலகன் ஓ முனியீஸ்வரர்களே சுவாமி என் பேரில் கருணைகடாக்ஷம்வைதது சகலவித்தைகளும் சம்பன்ன பாஷைகளும் நாலுவேத முதலான சாஸ்திரங்களும் உபதேசித்தருளவேண்டுமென்று கேள்க்க. அதற்கு முனியீஸ்வரர்கள் சந்தோஷப்பட்டு அப்படியேஆகட்டுமென்று சகல வித்தைகளும் கற்பித்துக்கொடுக்க பாலகன் அப்படியே வித்தியாப்பியாசஞ்செய்து வந்தார்.

சிலநாளைக்கு முன்னமே பிர்மதேவரும் ஸ்ரீ சாம்பசிவனும் காசிமா நகரத்தில் பிர்மாவானவர் பிர்மகுலத்திலே பிறந்து இராமயோகி ஐயரென்று நாமகரணம்பெற்று வளர்ந்துகொண்டிருந்தார். ஸ்ரீ சாம்பசிவனைவர் நந்திபுரராச்சியத்திலே பூசைநகரத்தைச் சார்ந்த முக்கோடி கிராமத்தில் ருத்திரவம்சத்திலே பிறந்து சிதம்பரதீக்ஷதரென்று நாமகரணம்பெற்று வாழ்ந்துக்கொண்டிருந்தார். அப்படி இருக்கிறபொழுது ஓர்நாள் இராமயோகிஐயரிடத்திற்கு நாரதமகாமுனீஸ்வரர் வந்து ஓய் இராமயோகி ஐயரே அகிலாண்டகோடி பிர்மாண்டநாயகரான ஸ்ரீமந் நாராயணமூர்த்தியானவர் காஸ்மீரதேசத்து ராசாவான ஜெயசிங்கு புத்திரராக ஜெனித்து அங்கேயிருந்து சில நாளைக்குப்பிறகு ஈசானியதேசத்திலே கௌதம நீர்த்தத்திற்கு அருகாமையிலிருக்கிற கோதாவரி ஆரண்யமான பத்திரிகேதாரவனத்திலே ஒரு குகையைக்கண்டு அதில் தபசுசெய்கிற இரண்டு யுகாந்தகாலத்து முனியீஸ்வரர்களிடத்திற்குப் போய் நாலுவேத சாஸ்திரங்களும் வில்வித்தை முதலான சம்பன்னபாஷைகளும் அப்பியாசஞ்செய்துகொண்டிருக்கிறாரென்று நாரதமகாமுனியீஸ்வரரானவர் விபரமாய்சொல்லிவிட்டு அவர் எதாஸ்தானத்திற்கு போய்ச்சேர்ந்தார்.

அதுகேட்டு இராமயோகி ஐயரானவர் நாரதர் சொல்போலே அந்தட்சணமே எழுந்திருந்து சிதம்பரதீக்ஷதரிடத்திற்குப் போகும்போது அவர் எதிரேவரக்கண்டு இராமயோகி ஐயர் சிதம்பரதீக்ஷதரை பூசித்து நமஸ்காரஞ்செய்ய சிதம்பரதீக்ஷதரும் எதிர் நமஸ்காரஞ்செய்து ஸ்ரீமந் நாராயணமூர்ததியினுடைய பிறப்பும் அவரிருப்பிடமும் நாரதர்சொன்னபிரகாரம் சிதம்பரதீக்ஷதருக்கு சொல்ல அவர் சந்தோஷப்பட்டு நாமிருபேரும் அந்தப்பகவான் வித்தை யப்பியாசஞ்செய்யுமிடத்திற்குப்போய் அவ்விடத்திலிருக்கிற திவ்யதேஜஸ்உள்ள மூர்த்தியாகிய பாலகுமாரனையும் முனியீஸ்வரமகாத்துமாக்களையும் தெரிசித்து அவர்கள் சொற்படி நடப்போம் வாருமையா இராமயோகிஐயரே என்றுசொல்லி இருபேரும் கோதாவரி ஆரண்யமாக பத்திரிகேதார வனத்திற்கு வந்து அவ்விடத்திலே அனேககாலமான தபசுசெய்கிற முனியீஸ்வரரைக்கண்டுதெரிசனஞ்செய்து நிற்கையில் அவர்களிடத்தில் கோடிசூரியப் பிரகாசம்

போலே முப்பத்திரண்டிலட்சணங்களுடனே விளங்காநின்ற பகவானை பார்த்து இந்த அருட்பிரகாசமான பாலகன் யாரென்றும் இந்த பிலத்து வாரத்திலேயிருக்கிறகாரணமென்னவென்றும் முனியீஸ்வரர்களைகேட்க அந்த முனியீஸ்வரர்கள் அனுகிரகஞ்செய்கிறார்கள். இந்தச் சிறுபிள்ளை யாகிய பாலகன் பூமண்டலம் முழுதும் ஆளுகிறநிமித்தமாய்ஸ்ரீமந் நாராயணமூர்த்தியினுடைய அம்சையினாலே காஸ்மீரதேசத்து இராசா வாகிய ஜெயசிங்குமகாராசாவின் ஸ்ரீயாகிய திலர்தமையம்மாள் என்கிற பதிவிரதை கெற்பத்தில் உற்பத்தியாகி எங்களிடத்தில் வந்து வீர போகவசந்தராயரென்று பேரும்பெற்று வேதமுதலான சகல வித்தைக ளும் சமபன்ன பாஷைகளும் அப்பியாசஞ் செய்துகொண்டிருக்கிறார். ஸ்ரீ இராமயோகிஜயரே நீர் யாரென்றால் பிர்மாவாகவும். சிதம்பரதீக்ஷ தரே நீர் யாரென்றால் ஸ்ரீசாம்பசிவனாகவும் இந்தப்பூமி பாரந்தீர்க்கும் காரணமாய் வீரபோகவசந்தராயரும் நீங்களிருவரும் திருமூர்த்திகளான படியினாலே பூலோகத்தில் வந்து பிறந்திருக்கிறீர்கள். இன்னம்கொஞ்ச நாளைக்குள்ளே பூமண்டலமெல்லாம் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியான வீரபோகவசந்தராயரும் துஷ்டரை சம்மாரம்பண்ணி பஞ்சசதகோடி பூமண்டலமெல்லாம் ஒரு குடையின்கீழ் ஆளப்போகிறார் அதற்குமுன் பாக துஷ்டர்கள் அஷியவருஷத்துக்குள்ளாக நசித்துப்போவார்கள். புண்ணியவான்கள் அவர் பாததரிசனங்கண்டு மகாபாக்கியம்பெற்று சுக மாக வாழ்ந்துக்கொண்டிருப்பார்கள்.

ஆனால் அந்தந்ததுஷ்டர்கள் யெப்படி நசித்துபோவார்களென்றால் சொல்லுகிறோம் அந்தந்த தேசங்களிலே சகலவியாதிகளடைந்து சிறிது பேர்கள் நசித்துப்போவார்கள். அதுவுமல்லாமல் அன்னியோன்னிய மித்துருவத்தாலேயும் சத்துருக்களினாலேயும் மித்துருக்களினாலே யும் சிறிது பேருக்கு அவதியும் பாதகங்களதிகமாயும் அதற்காக கனக துற்கையம்மாளென்கிற சத்தியானவள் பூமியிலே பிறந்து உக்கிரங் கொள்ளுகிறாள். அந்த உக்கிரத்தினாலேயும் மத்தமலைகளினுடைய உச்சியிலே புகையான எரிச்சலால் சிறிது சனங்கள் நசித்துப்போவார் கள். சிலர் சிவன்விஷ்ணு ஆலயமுதலான தேவாலயங்களிலிருந்தும் தேவதைகளும் மூர்த்திசொரூபமாய் எழுந்திருந்து அதிக உக்கிரங் கொண்டு அந்தந்தக் கிராமங்களில் நடனமாடுவார்கள். அதினாலே பாவி கள் மனது சஞ்சலப்படுவார்கள். மல்லிகார்ச்சுனசுவாமி மனிதர்களி டத்தில் பேசுவார் அப்போது கல்மழையினாலே சிலபேர்கள் நசித்துப் போவார்கள் கஞ்சிபுரம் காமாட்சியம்மாள் உக்கிரங்கொண்டு தடசணதே சத்தில் மனிதர்களையும்குழந்தைகளையும்சம்மாரஞ்செய்வாள். அப்போது

தட்சணத்திலுள்ள மனிதர்கள் பாவதோஷங்கள் அதிகமாகச்செய்வார்கள் அந்தப்பாவங்களை சம்மாரஞ்செய்யும்பொருட்டாய் கதிர்காமதேசத்து கரும்பாம்புண்டாகி துஷ்டர்களை நஷ்டம்பண்ணும். கர்னாடக தேசத்திற்கு காளிகாதேவியும் தூலுக்கர் தேசத்திற்கு லக்காதேவி என்கிற துற்கையும், நாகேந்திரதேசத்திற்கும் முள்ளும், காண்டய ராஜ்ஜயத்திற்கும் பத்திரகாளியும், மத்திமதேசமானதமிழ்தேசத்திற்கு வீரபத்திர சுவாமியும், நந்திராச்சியத்திற்கு நாகேந்திரனும், இந்திரபாம்புமாய் அந்தந்ததேவதைகள் நாலுதிக்கிலும் உக்கிரரூபம்கொண்டு வருவார்கள். அப்படி வரும்பொழுது இஷ்டர்கள் பெரியோர்கள் சிறியோர்களுடைய வாய்களிலே கிரிமிகள் விழுந்து தலைமண்டைகள் வெடித்து நின்றவிடத்திலே மாள்வார்கள். இந்தப்பிரகாரமாய் ஐந்நூறுகோடி பூமண்டலத்துக்கு பாம்புண்டாகி பலவிதமாய் சிசுமுதல் விருத்தாப்பியமுள்ளவர்கள்வரையில் மல்லிகை பூச்சி விழுந்து நஷ்டமாவார்கள்.

அப்போது மந்தரகிரியிலேயும் பூங்காவனமுதலான இடங்களிலேயும் காகம் கடப்பிடும் வித்தைகளதிகமாயிருக்கும் நரிகள், பிராந்துகள், ஆந்தைகள், நாலுசாமத்திலும் இரவும் பகலும் ஓயாமல் கூப்பிடும். ஆகாசத்திலே நக்ஷத்திரங்கள் காணப்படும் லோகத்திலே அநேக கஸ்திகள் நடக்கும். மேலும் நாலுதிக்கிலும் அந்தகாரமாம் ஆகாசத்திலும் ஆகாரா வென்று வெகு சத்தமாய் தொனிபிறந்து இடியென்று கேட்கப்படும் அந்த சத்தத்தினாலே சிறிதுபேர்கள் நஷ்டப்படுவார்கள் ஜலத்திலே இருக்கிற நீர்வாழ் ஜீவசெந்துக்களெல்லாம் லோகத்திலே வந்து பிறந்து பூமியிலே சேர்ந்தோம் சேர்ந்தோமென்று கூப்பிடும் கைலாசத்திலேயிருந்து ஒரு மேகமாய்க் கூடிவந்து திவ்யமான கோவில்களிலே புகுந்து எட்டுநாளிருந்து ஆடும் கூந்தல் கூப்பிடும் மறுபடிமாயமாய்ப்போகும் சத்திகை புலியாய் வந்து சிலது துஷ்டர்களைக் கொல்லும். பின்னும் கோவில்களிலே ஒருமிதனை பூந்துக்கொண்டு மனுஷரை மிகவும் கொல்லும் குமரசாமி கோவிலிலே ஏழுநாள்வரைக்கும் கதவை மூடிக்கொண்டு திறக்காமலிருக்கும் மேல்காற்று விசையாயடிக்கும் அதனாலே சிலதுபேர்கள் நசித்துப்போவார்கள். சூரிய மண்டலத்திலேயிருந்து தளதளவென்று ஓர் இடிவிழும் அந்த இடியினாலே ஆரணிவேலூர் நாசமாய்ப்போகும். வெங்கிடாசலபதிகோவிலிலே மிதனைபூந்து கூத்தாடும் மேலாகாசத்திலிருந்து சிங்காரமாய் ஒரு சத்தம் பிறக்கும் அந்த சத்தத்தினாலே லோகத்திலேயிருக்கிற ஜனங்களெல்லாம் நடுநடுங்குவார்கள். தேவாலயங்களிலிருக்கிற கெருடதுவஜங்களெல்லாம் ஓடிந்து நாலுதிக்கிலும் சிதறிவிழும் திருவாலூர் வீரபாகு சுவாமிக்கு வேர்வையாகும் அப்போது ஜனங்களெல்லாம் நஷ்டப்படுவார்கள், மல்லிகார்ச்சுன சுவாமி நேத்திரத்திலே நெருப்பாகும். அப்போது சுவானம் கடகடவென்று கூப்பிடும். அதனு

லே ஆகாச தேவதைகள் வாக்கினாலே சத்தம்பிறந்து சிறிது ஜனங்கள் நஷ்டமாவார்கள். சிவன் சடை முடி அவிழ்ந்துவீசி எட்டுநாள் கழித்து தரணியிலேவிழும். அதனாலே சில ஜனங்கள் நஷ்டமாவார்கள். திருப்பதி வெங்கிடாசலப்பதி சுவாமி கோவிலிலே மகாலெக்ஷிமி புகுந்திடுவாள். அவள் மாய்கைவசத்திலே சிம்மம்பிறந்து ஜெகமெங்கும் நடுநடுங்கும். சிறிது பாஷாய்மடிந்து பூமியிலே நாலுதிக்கும் ஆராக்கும் திருவள்ளுவராகப்பிறந்து அவருக்கு வேர்வையாகி அதனாலே சிறிது ஜனங்கள் நஷ்டமாவார்கள். லெக்ஷிமிதேவி கண்களிலிருந்து ஜலம் வடியும். விநாயகர் வேதமந்திரம் புண்ணியபாராயணம் பண்ணுவார். விநாயகருடைய சரித்திரத்தை-எங்கும் வாசிப்பார்கள். மேலும் ஸ்திரீ ஜாதிகள் ஜலக்கிரீடை மிகவுஞ்செய்து ஜலத்திற்குள்ளே காலாட்டுவார்கள். அந்த ஜலக்கிரீடையினாலே ஸ்திரீகளினுடைய கண்களிலே ரத்தம்போல் சிவக்கும். அப்போது துலுக்கருடைய தேசமெல்லாம் நாசமாகும். துலுக்கர் பெரியதனக்காரரெல்லாமிடைந்துபோவார்கள் கண்களிலேரத்தங்கள் கப்பி பேய் புலிகள் எரை நீறாய் ஜனங்களை சேதமபண்ணும். எல்லோரும் துக்கித்து துலுக்கர் பாங்காகுவார்கள். வீரப்பிரம்ம பிறந்தநாள் முதற்கொண்டு வாரவையிரவராகி எவ்வணமதிகமாயிருக்கும் ஓய் இராமயோகிஐயரே சிதம்பர தீக்ஷகரே கேளுங்கள் மேலும் சமஸ்தான பேரும் வீரபிரமத்தினுடைய சரித்திரத்தைக்கேட்டு மிகவும் இச்சித்திருப்பார்கள். அமாவாசைநாளிலே ராத்திரி பூரணசந்திரன் உதயமாகும் அதனாலே சிலதுபேர்கள் நசித்துப்போவார்கள். இராத்திரியில் சூரியன் உதயமாகும். ஆகாசம் சிற்பியாகும். பின்னும் ஆகாசம் செமமானமிடும் அப்போது பெரியோர்கள் புண்ணிய புருஷாள் அஷ்டதிக்கும மந்திரங்களை துதிசெய்வார்கள் மேலும அஷ்டகஜமும வானமும் ஜென்மாந்திரமே அப்பியாசம பண்ணுவார்கள். பட்டணங்களிலேயும், ஊர்களிலேயும், வனாந்திரங்களிலேயும ரத்தமழை பெய்யும், அதனாலே சிலதுபேர்கள் நசிப்பார்கள் பட்டணவாசல்களிலே லட்சுமிதேவி துக்கித்து அழுவாள். அப்போது சமுத்திரங்களும பொங்கும. அதனாலே துஷ்டர்கள் முதலானவர்கள் நஷ்டமாவார்கள் வீரப்பிரமம வந்தாரோவென்றுமனிதர்களுக்குக கேள்க்குமபடியாய் பூமாதேவி சொல்லி வாழ்த்துவாள். பூலோகத்திலே முன் யுகங்களிலே எந்தப்பிரகாரம் சத்தியமாய் நடந்ததோ அந்தப்பிரகாரம் சீமைகளிலே சத்தியத்துடனே சகல ஜனங்களும் சமபத்துவான்களாகி தர்ம நீதியாய் வாழ்ந்திருப்பார்கள். இராமயோகி ஐயரே சிதம்பா தீக்ஷதரே இந்த பாலகுமாரனாகிய வீரபிரமம் இவ்விடம்வந்து ஆறு மாதம் மாச்சுது இன்னம மூன்றுமாதம் இவ்விடத்திலிருந்து அப்பால் கேதாரவனத்துக்குப்போய் அவ்விடத்திலிருந்து ஸ்ரீ சாம்பசிவமூர்த்தியைப் பூசித்து இரண்டு வருடம் தவம்செய்து சிவனிடத்திலேமூன்றுவரம் பெற்றுக்கொண்டு கிரோதன ௵ சித்திரைமீ சுத்த பௌர்ணமி வியாழக்கிழமை இந்த சுபதினத்

திலே இந்திரகிரி பர்வதத்திர்க்குப்போய் அவ்விடத்திலிருக்கிற மகாத்துமாக்களையும் முனீஸ்வரர்களையும் தெரிசித்து அவர்களுடைய அநுமதியும் பெற்றுக்கொண்டு அவ்விடத்தைவிட்டு ஸ்ரீ கைலாச பர்வதத்திற்குபோய் மல்லிகார்ச்சுன சுவாமியையுங்கண்டு தெரிசித்து அவருடைய அநுமதியும் பெற்றுக்கொண்டு தரிசனஞ்செய்து கார்த்திகைவீரர் அர்ச்சுனன் கையில் கங்கணகடகம் வாங்கிக்கொண்டுபோக நாடெங்கும்போய் அவருடைய தரிசனம் பெற்றுக்கொண்டு பெரியவாடையென்னும் ஊருக்குபோய் அவ்விடம் இருக்கப்பட்டவர்களை தன் கைவசப்படுத்திக்கொண்டு கெங்காதீரம் போய்ச்சேர்ந்து அவ்விடத்திலிருந்து தர்மராஜாக்களுடைய சிம்மாசன முத்திரையையும் கைக்கொண்டு துஷ்டர்களைச் சம்மாரஞ்செய்து அக்ஷயனும் போனவுடனே பிரபவனும் முதற்கொண்டு ஏகசக்கிர சிம்மாசனமுதலாக இராச்சியபரிபாலனஞ் செய்யவருவார். அப்போது நாங்களும் கூடவருவோம். இவர் ராச்சியபரிபாலனஞ் செய்யும்போது மாதம் மூன்றுமழை பெய்யும். பயிர்கள் செம்மையாய் விளையும். தர்மநீதி மிகுதியாய் நடக்கும். ஜனங்கள் பாக்கியவான்களாய் தர்மசிந்தையோடு வாழ்ந்துகொண்டிருப்பார்கள். ஒய் இராமயோகி ஐயரே சிதம்பர தீட்சதரே இது சங்கதிகளெல்லாம் எங்களுக்கு ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி போதித்த படியினாலே நாங்கள் உங்களிடத்தில் சொன்னோம். நீங்கள் எங்குமில்லாத புதுமை கேள்விப்பட்டீர்கள். இதுகளை நீங்கள் ஒயாமல் பூலோகத்திலே சகலமான ஜனங்களுக்குமறிவித்து எழுதியனுப்பி பிரசங்கங்கள் செய்யுங்களென்று அந்தகாரத்திலே பூமியிலுள்ள சகல ஜனங்களுக்கு எந்தப்பிரகாரம் தெரியவேண்டுமென்றால், தரித்திரவான் வாசலிலே பொன்மாரி பொழிந்தால் எவ்வளவு மகிழ்ச்சியுண்டாகுமோ அவ்வளவு தூரம் சந்தோஷத்துடனே பூமியிலுள்ள புண்ணியபுருஷாளும் தரிசனத்துக்கு இருப்பார்கள். பிர்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திர இந்த நாலு வருணத்தாரும் அவர்களுடைய முறைதப்பாமல் சந்தோஷமாக இருப்பார்கள் என்று அந்த மகாத்துமாக்களாகிய முனீஸ்வரர்கள் எங்களுக்குத் திருவுளம்பற்றினார்களில்லை. சிதம்பர தீட்சதரும் இராமயோகி ஐயரும் நீங்களிருவருஞ்சொன்ன வார்த்தைகள் உள்ளபடிதான் என்றெண்ணி நடக்கிற பேர்களுக்கும் பத்திரிகையைவைத்து பூசைபண்ணியவர்களுக்கும் ஆயுசுபரியந்தம் ஆரோக்கியமும் கனதனவஸ்துக்களும் வாகனாதிகளும் பெற்று சுகமாயிருப்பார்கள்.

இதை எழுதாமலும் படிக்காமலும் படித்ததைக்கேட்காமலும் அசட்டையாகி இகழ்ச்சிசெய்த பேர்களுக்கும், துஷ்டபாவிகளான ஜனங்க

ளுக்கும் அட்சயவருஷத்திற்குள்ளாக அதமாய்ப்போகும்படியாய் கஷ்டங்கள் சித்திக்கும். அவர்கள் வாயிலே கிருமிகளுண்டாகி அதினாலே அவதிப்பட்டுப் புண்ணியத்திற்குள்ளாகாமல் பாவத்திற்குள்ளாகிப்போவார்கள்.

இதுவுமல்லாமல் கண்டனை தேண்டனை செய்ய கனகதுற்கையம்மாள் விசாரிக்க வருகிறாள் அதனாலேயும் சனங்கள் அதமாய்ப்போவார்கள் சிதம்பரமூர்த்தியே இராமயோகிஐயரே நீங்களிவ்விடத்திலிருக்கப்பட்ட மகிமைகளெல்லாம் பார்த்தீர்களே. இனிமேல் நீங்களிருவரும் தங்களுடைய ஆசிர்மத்திற்குப்போய் அவ்விடத்திலிருந்துபூலோகத்தில் இருக்கப்பட்ட சனங்களுக்குயெல்லாம் தெரியத்தக்கதாக மேலே சொல்லிய விபரங்களைக்குறித்து பத்திரிகைஎழுதி அந்தந்ததேசங்களுக்கு அனுப்பித்து இனிமேலாகிலும் பாவங்களைச் செய்யாமலும் மேலான தர்மங்களையும், புண்ணியங்களையும் தேடிக்கொள்ளும்படியாயும் இந்தபடி நடந்துக்கொள்ளும்படியாய்த் தெரிவியுங்கள். பூலோகத்திலே துஷ்டர்களதிகரித்தபடியினாலே அவர்களை கண்டனைபண்ணவேண்டிய நிமித்தமாய் போசராசாவின் அண்டையில் சத்தியாகிய கனகதுற்கையம்மாள் உற்பத்தியாகியிருக்கிறாள். ஆனதால் நீங்கள் அந்த கனகதுற்கையம்மாளையும், பத்திரிகையும எழுதி அந்தந்ததேசங்களுக்கு அனுப்பித்து அதற்கு அனுகூலமாய் நீங்களும் இருந்து துஷ்டர்கள் முதலான பேர்களையும தண்டனைபண்ணி அறியும்படியாய் செய்விக்கிறதென்று முனிஸ்வரர்கள் ஆக்கியாபித்தப்தடியினாலே நாங்கள்அவர்களனுமதியைப்பெற்றுககொண்டு எங்களாசிரமத்துக்கு வந்து பூலோகத்திலிருக்கப்பட்ட புண்ணிய புருடர்களுக்குத் தெரியவேண்டிய நிமித்தம் இந்தப் பத்திரிகை எழுதி அனுபபினோம அதை அந்தமச்சதேசத்தை துரைத்தனஞ்செய்யப்பட்ட துஷ்டாத்மாக்கள் கண்டு யெங்கள்பேரிலே சிற்றங்கொண்டு நீங்கள் ஆங்காரமாய் முடிவுகாலம் வந்ததென்று பிரபல்யமாய் எழுதவேண்டியதென்னவென்றும் இந்த பத்திரிகையை எழுதினவர்கள் யாரென்றுங்கேட்டு எங்களைப் பிடித்துக்கொண்டுவரச்சொல்லி சில தூதர்களை எங்களாச்சிரமத்திற்கு அனுப்பினார்கள். அந்த தூதர்கள் எங்களை யழைக்க நாங்களும் நிஷ்டையிலே பார்த்துக்கொண்டு அந்த துஷ்டர்கள் மெத்தத் துரிதமாயிருக்கிறார்களென்று தெரிந்து இவர்களுடன் பேசலாகாதென்று அவர்களோடு போனோம். அந்த துஷ்டர்கள் எங்களைக் கண்டமாத்திரத்திலே நீங்கள் யார் இந்தப் பிரகாரமாக என் எழுதுனீர்கள். இந்த கலிபுகத்

திற்கு நீங்களா தெய்வம் கெடுவுவைத்து எழுதவேண்டிய காரியமென்ன வென்று கேட்டதற்கு நாங்கள் எங்களுக்கு ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி பிரசன்னமாகி வந்து சொன்னபடியினாலே இந்தப்படிக்கி எழுதியனுப்பிவைத்தோமென்று சொன்னோம். அப்படிக்கி உங்களுடத்தில் ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி பிரசன்னமாகி இருந்தால் ஒரு சோதனைப்பார்க்கிறோம் அதற்கு நீங்கள் நின்றால் எங்களுக்குத்தெய்வந்தானென்றுசொன்னார்கள். அதற்கு நாங்கள் சொன்னது உங்கள் மனதிற்கு எப்படிசெய்யவேண்டியதோ அப்படி செய்யலாமென்று சொன்னோம்.

அதற்குமேல் அந்த துஷ்டர்கள் கருமருந்தை எடுத்து சோடி பீரங்கியைச்செலுத்தி குண்டுபோட்டு கெட்டித்து எங்களை ஜோடி பீரங்கி எதிரே நிறுத்தி இனி உங்களுடைய மகத்துவத்தைப் பாருமென்று ஜோடி பீரங்கியில் தீயைக்கொளுத்தினார்கள். அப்போது இரண்டு குண்டுகளும் அக்கினிமயமாயெழும்பி எங்கள் கையிலே வந்திருந்தது. அதைத் மேற்படி துஷ்டர்கள் கண்டு நடுநடுங்கி திகிலெடுத்து இவர்கள் எழுதினபடிநடக்குமென்று யோசித்து வணங்கி விலகிப்போய் நின்றார்கள் அந்த சமயத்திலே மகாமுனியீஸ்வரர்களும், மகாசித்தர்களும, மகாயோகிஸ்வரர்களும் பிரசன்னமாகி வந்து ஓய் சிதம்பரதீக்ஷிதரே, இராமயோகிஐயரே உங்களை இந்த துஷடர்களுக்கு பகவானென்றும், கர்த்தாவென்றுந்தெரியாமல் இந்த துஷ்டர்கள் மதத்தினாலே இத்தனை இர்சைப்பண்ணினார்கள் இவர்களுக்கு ஆகாதகாலம் சம்பவித்துக்கொண்டபடியினாலே இந்தத்துற்புத்திவந்ததென்று சொல்லிப்போய்விட்டார்கள் ஆகையால் அக்ஷயவருஷம் போனதின்பிறகு பிரபவ வருஷம் முதற்கொண்டு வீரப்பிர்மம் பூமிக்கு அதிபதியாக இராச்சியபரிபாலனஞ்செய்ய வருகிறார். அப்போது உங்களுக்கு அந்த விருத்தாந்தம் இன்பமாய் பகவத்தர்மசிந்தனையாசயிருக்கப்புண்ணியபுருஷர்களுக்குத் தெரியும்படியாகி மகாமுனியீஸ்வரர்களும், மகாசித்தர்களும் ஆக்கியாபித்தபடி நாங்கள் தேசதேசத்திற்கு எழுதி அனுப்பிவைத்திருக்கிறோம். அப்பாலுண்டான இரண்டாம் பத்திரிகை புண்ணியபுருஷர்களுக்கும், சிவசிந்தனையாயிருக்கப்பட்ட சிவனடியார்களுக்கும் நேத்திராந்தத்திலே எரிவுகண்டு இரத்தம் பிறக்கும். இதற்கு பிரிதி எழுதிக்கொண்டு பூசைபண்ணினபேர்களுக்கு மனதிலே எந்தகாரியத்தைநினைத்து பூசைசெய்கிறார்களோ அந்தக்காரியம் அவர்களுக்குசித்தியாகும். ஆகையால் இதை உள்ளப்படிதானென்றுநடக்கிறபேர்களுக்கு

ம்காதர்ப்பணம் பண்ணின பலன் பிறக்கும் இதற்கு பிசகில்லை. மேற் கண்டபடிக்கு பிரபவ வருடத்தில் வீரபிர்மம் அவர்கள் வந்து இராச்சிய பரிபாலனம் பண்ணுவார்கள். இந்தப்பத்திரிகையை நிச்சயமென்றெண் ணிநடக்கவேணும். நாங்களிரண்டுபேரும் தேசங்களுக்குப் பிரவேசிக் கிறோம். இந்தப் பத்திரிகையை யார்கொண்டுவந்து கொடுக்கிறார்களோ அவர்களுக்கும், வாசிக்கிறவர்களுக்கும் ஜோடி வஸ்திரமும் சொர்ணபுஸ் பம்கொடுத்தால் அவர்களுக்கு இரட்டிப்புதங்கள் வீட்டில் உற்பத்தியா யிருக்கும்படியாய் சாம்பசிவமூர்த்தி கட்டளைபண்ணுவார்.

இதை எழுதினபேரும் வாசித்தபேரும் கேட்டபேரும் நிச்சய மென்றெண்ணி பூஜித்தபேரும், இந்தப் பத்திரிகையை நம்பினபேரும் இவர்களெல்லோரும் தீர்க்காயுசுடையவரும் அர்ப்பாயசுகாரருமிருந்தா லும் நாங்கள் வருகிறமட்டுக்கும் சுகமேயிருப்பார்கள். மேற்கண்டபடி போற்றுமவர்களை எமன் அணுகவும், எமன் கோட்டாலைசெய்யவும் கூடாது. சகல சம்பத்துகளும் உண்டாகியிருக்கும் சாம்பசிவமூர்த்தியே துணைசெய்வார் விதர்பபதேசத்தைச்சேர்ந்த மல்லிகார்ச்சுன புரத்திலி ருக்கும் அருணசலம் செட்டியாளவர் கப்பல் வியாபாரங்கொண்டு கட லேறிபோகிறபோது கப்பலை சுழல்காற்று தள்ளிக்கொண்டுபோய் ஒரு திசையில்தள்ள தண்ணீர் கடலேற்றும் புட்பக தீவுக்கப்பாலேபோய் சேர்ந்திருக்கிறபோது அந்த புட்பகதீவிலே முப்பத்துமுக்கோடி தேவர் கள் நாற்பத்தெண்ணாயிரங்கோடி ரிஷிகள், கணநாதர்கள், முனிவோர் கள், தும்புருநாரதர்களுள்ளே அனந்தகோடி சித்தர்கள் முதலானபேர் கள் திருச்சபைக்கூட்டமாக தம்புருவீணை சரமண்டலம் சங்குசெயகண்டி சேகநாதங்கள் தேவதுந்துபிகள் முழக்கமாக வேதவாக்கியத்துடனே பாரிஜாதபுஸ்பம்காதவழிக்கி கமகமவென்றவாசத்துடனே இப்படிஆராப ரச்சத்தத்துடன் சமுத்திரமுழக்கம்போலஅரகராவென்கிறசப்தமும் ஹரி ஓம்நமநாராயணவென்கிற சப்தமும் தொனிக்க பரிபூரண கடாக்ஷக்கிரு பையுடனே சம்பிரமாயிருக்கிறவேளையில் அந்தத் திருக்கூட்டத்திலிருக் கிற அதிசயங்களைப் பார்த்துக்கொண்டு நிற்கும்போது அந்த யோகிஸ் வரர்களிலே ஒருவர் இந்த கப்பல் அருகாமையில்வந்து நின்றுக்கொண்டு அது யாரடா கப்பல்காரராவென்று கேள்க்க அப்போது அருணசலம் செட்டிசொன்னது சுவாமி அடியேனுக்கு விதற்பதேசத்திற்குச்சேர்ந்த

மல்லிகார்ச்சனபுரத்திலிருக்கும் வைசியகுலம். அடியேன் பேர் அருணாசலஞ்செட்டி என்றுசொன்னபோது அந்த யோகீஸ்வரர் சொல்லுவார் அடாமானிடவா நீ இங்கேவரவொண்ணுதே என்றபோது அந்த அருணாசலம்செட்டி யோகீஸ்வரரைப் பார்த்து சுவாமி அடியனுடைய கப்பலை கழல்காற்று இங்கேகொண்டுவந்துவிட்டதென்றுசொன்ஞன் அப்போது அவர்சொன்னது வந்தபடியே கப்பலை நடத்திக்கொண்டுபோ உன்னிடத்தில் ஒருகாரியமும் சொல்லப்படாதென்று யோகீஸ்வரர்சொல்ல அவரை இந்த அருணாசலஞ்செட்டி மிகவும் பயபக்தியாக வணங்கி சாஷ்டாங்கமாக தெண்டனிட்டு கேள்க்க யோகீஸ்வரர் ஒருவசனம் திருவுளம் பற்றினர்.

இந்த புஸ்பகத்தீவிலே திருமூர்த்திகளும், தேவர்களும் இருக்கிற இடத்திலே நீ கால் நாழிகை தரிக்கப்படாது சாபம் வந்து சித்திக்கும் அது எதினுலென்ருல் பரமரகசியம்சொல்லப்பட்ட இடம். ஆனுல் நீ இவ்விடத்திற்கு வந்தபோதே முன் பூர்வஜென்மத்திலே வைசியர் குலத்தில் புண்ணியபுருஷனுயிருந்தபடியினுலே உன்னிடத்தில் உள்ள காரியஞ்சொல்லப்படுமென்று யோகீஸ்வரர் உள்ளமகிழ்ந்து கனிவாய்திறந்து திருவுளம்பற்றியருளிய திருவுளபிறசாதம் என்ன வென்ருல்.

ஆதிமூலமாகிய நாராயணமூர்த்தி கலியுகஅவதாரமாய் ஸ்ரீமது வீரப்பிரமமும், இராமயோகி ஐயரும், சிதம்பரதீக்ஷதருமாகத் தேவர்கள் கூட்டத்துடனே இந்த புஷ்பக வனத்திலே எழுந்தருளியிருக்கின்ருர்கள். இனிமேல் சிலநாள்சென்றதின்பிறகு பூலோகமெல்லாம் ஒரு குடையின் கீழாக ஆறிலொரு கடமைக்கொண்டு அசையாமணியுங்கட்டி செங்கோல் செலுத்தி பூமியாளும்படி ஜெயம்பெற்று வாழ்வார்கள் அப்போது பூமியெல்லாம் புஷ்பமாரியாகவும் பேயும், புலியும், பசுவும் ஒரு துறையிலே நின்று தண்ணீர்குடிக்கும். ஆயிரத்தெட்டு சிவ ஆலயங்களும், நூற்றெட்டுத் திருப்பதியும், பிர்மாலயங்களும், குருஆலயங்களும் அன்னசத்திரங்களும், வீரசிம்மாதனத்திற்குடைய பஞ்சம குடத்திற்கு சேர்ந்த அறுபத்துநாலு சிம்மாசனுதிபதியடங்களும் மேன்மேலும் விருத்தியாகி நன்ருய் விளங்கும். அப்போது இந்தபூமியில் நடக்கிற நடத்தை எல்லாம் அந்த சுவாமிகள் திருவுளத்திலே தெரிந்து உத்திரவானதிருவுளம் பிரசாதமென்னவென்ருல் பிர்ம, க்ஷத்திரிய, வைசிய, சூத்திரென்கிற குலாசாரமும் தப்பி அவர்கள் வேதமார்க்கமுந் தப்பி மாதபிதா குருவென்கிற சந்தியமுந் தப்பி குரு ஒரு சிஷியனும், சிஷன் ஒரு குருவாக

வும், இராசா ஒரு சேவுகனுகவும், சேவுகன் ஒரு இராசாவாகவும், மேல் கீழாகவும், கீழ் மேலாகவும், அவசத்தியமும் அன்யாயமும், புருஷன் ஒரு பெண்சாதியாகவும், பெண்சாதி ஒரு புருஷனுகவும், மெய் பொய்யாக வும், பொய் மெய்யாகவும், குலே, களவு, காமம், குருத்து ரோகமும் இப் படி பஞ்சமாபாதகமும் மிதந்து பூமியெல்லாம் சமன்மூடிப்போயிருக்கிற தென்றும், இதுவெல்லாம் சங்காரஞ்செய்யத்தக்கதாக பிர்மதேவனும் வேதாளத்தைவிட்டும், கொள்ளை காச்சலைவிட்டும் சிலது பால்ய சனங் களை சங்காரஞ்செய்து வெகுதாணிஞ்ஞு காளியைவிட்டுக் காவுக்கொள் ளும்படியாய் சற்பேதியைவிட்டார். இனிமேல் துற்காலேவிட்டு பலவிதநோய்கண்டு சனங்கள் மடிந்துபோவார்கள். இந்த மூன்றுபேர் களால் அஞ்ஞான இருட்களெல்லாம் நீங்கி வெளிச்சமாகும்படிக்கு இந்த மூன்று மந்திரங்களினுலே துஷ்டநிக்கிரக சிஷ்டபரிபாலனஞ் செய்யவேண்டுமென்று உத்திரவுசெய்தார்கள். பின்னும் மூன்று பேரும் திரிபுரத்தைத் தகனஞ்செய்ததுபோல் அவசத்தியத்தை யழித்து சத்தி யத்தை நிலைநிறுத்தி கெற்வபரிகாரஞ்செய்து சுவாமிகளிடத்தில் மூன்று பேரும் வந்து சேர்ந்தமாத்திரத்திலே சுவாமிகள் பூமியாளும்படிக்குவரு வார்கள் மாதம் மூன்றுமழைபெய்யும் அப்போது புண்ணியபுருஷர் களாகியிருக்கிறபேர்கள் சுவாமியார் பாதாரவிந்தம் தரிசனம் காண்பார் கள். இச்சங்கதியை பூமியெல்லாம் அறியப்படுத்திவை என்று சொல்லி விட்டு மாய்கையாய்த்திருக்கூட்டத்திலேபோய் சேர்ந்தார்.

பிற்பாடு அருணுசலஞ்செட்டியானவர் கப்பல் நடத்திக்கொண்டு வெகு நாளைக்கு பிறகு மல்லிகார்ச்சுனபுரத்திற்கு வந்துசேர்ந்தார். அப் போது இந்த வர்த்தமானங்களெல்லாம்விதர்ப்பதேசத்து இராஜாகேட்டு அருணுசலம் செட்டியாரை வணங்கி வேண்டிய சந்தோஷம் பண்ணித் துதித்து சுகமேயிருந்தார்கள்.

இதுசேதியை தேசதேசங்களுக்கும் எழுதி அனுப்பிவைத்து தா னும் அந்த தேசத்தாரும் சோமவாரம் விரதமிருந்து சுவாமி பத்திரிகை யைவைத்து அர்ச்சனைபண்ணிவருகிறுர்கள். இந்தப் பத்திரிகையை பொய்யென்று சொன்னபேர்களும், இதை இகழ்ச்சி செய்தபேர்களும் கெங்கைக்கரையிலே காராம் பசுவையும் மாதா பிதா குருக்களையும் கொன்ற தோஷத்திலே போவார்கள். இதை மெய்யென்று மனதி லெண்ணி பூசைஅர்ச்சனைசெய்தபேர்கள் லோகரக்ஷகராகிய ஸ்ரீ வீரபிர்

மத்தினுடைய பாதாரவிந்தம்பெற்று சகலசம்பத்துடனே வாழ்ந்திருப்பார்கள் இது நிச்சயம். சுபம்.

---

ஸ்ரீ வீரபோகவசந்தராய நம:

ஸ்ரீ காரணவஸ்துவாகிய பரத்துவாச ரிஷியினுடைய ஆசிரமத்திலிருக்கும் ஸ்ரீ வீரபிர்மம் அவர்கள் திருமுகம்சாமி சாஸ்திரியாராகிய மஹாநாராயணசிம்மாசாரியார் விகாரி ஸ்ரீ பிறந்த பலன்களுக்கும் மஹா சாஸ்திரியார் ஸ்ரீ ஜோசியர் அவர்களுக்கும் சகல லோகப்பிரபஞ்சத்திற்கும் என் சமமதியாக எழுதியனுப்பிவித்த நீருபம் துந்துபி ஸ்ரீ வைகாசி மீ 13உ குருவாரம் பூராட நட்சத்திரம் திரையோதசி கூடின சுபயோக சுபதினத்தில் பரத்துவாசருடைய ஆசிரமம்போய்ச்சேர்ந்தோம். அங்கே அகோரமான வனங்களுண்டு அந்த வனத்திலே மகா முனிஸ்வரர்களும், சித்தர்திகளும் இருந்தார்கள் அவர்களைக் கண்டு தரிசனம் பண்ணினோம் அவர்களருகாமையிலே பதினொரு வயதுள்ள குமாரனாகிய மகாமூர்த்தியாய் விளங்கியிருக்கிறாரே அவர்யாரென்றுகேட்டதற்கு அங்கேயிருக்கிற மகாத்துமாக்கள் சொன்னது, இந்த பாலகுமாரன் பிரபவ வருஷத்திலே பூமியாளுகிறதற்கு ஸ்ரீமந் நமோநாராயணமூர்த்தியினுடைய அம்சையுடையவராகயிருக்கிறார். காஸ்மீரமென்கிற மகா தேசத்திலே ஜெயசிங்கு என்று க்ஷத்திரிய இராசாவினுடைய தேவியானவள் மகாசௌந்திரியசௌபாக்கியத்துடனே மகாபதிவிரதையாகயிருக்கிற திலர்தமையம்மாள் வயிற்றிலே உற்பத்தியாகிபிறந்தவர். இந்த புண்ணியபுருஷர் அதர்வணவேதமுதலான சாஸ்திரவித்தைகளும் கற்றறிந்தவர் அவரிவ்விடத்திலே மூன்று வருஷமிருப்பார். அதற்கப்பால் கேதாரவனத்திலே இரண்டுமாதம் அன்னம் புசிக்காமல் தபசுபண்ணி ஸ்ரீ சாம்பசிவமூர்த்தியினுடைய அனுகிரகத்தையடைவாரென்றும் பின்னும் மூன்று வரம்வாங்கிக்கொண்டு அங்கேயிருந்து கிரோதன ஸ்ரீ சித்திரை மீ பூர்வபட்சம் குருவாரமும் கூடின சுபதினத்தில் இந்திரநீலபர்வதத்திற்கு போய் அங்கேயிருக்கிறமகாமுனியீஸ்வரர்களைக்கண்டு தரிசனம்பண்ணிக்கொண்டு அவர்களண்டையில் காத்திருந்து சிறிது வரபிரசாதங்களையும் பெற்றுக்கொண்டு தெய்வ மந்திரங்களை உபதேசம்பண்ணிகொண்டு மல்லிகார்ச்சுன சுவாமியைக்கண்டு தரிசனம்செய்து அவரண்டையில் சிலநாள் கழித்து துற்கைனியிடத்தில் அனுமதிபெற்றுக்கொண்டு தங்கள் வம்மிசத்தாராகிய தருமராசாக்கள் பட்டணத்திலே

போட்டிருக்கிற திரவியங்களை கைவசப்படுத்திக்கொண்டு சிம்மாசனமும் கைக்கொண்டு இந்திரகிரிபர்வதத்தின் அடிவாரத்திலேயிருந்து கலியாபுரம்வரையிலும் அனந்தநகரங்கள் விளங்க உண்டுபண்ணி அகடிய ஸூ முடிந்ததின் பிறகு பிரபவ ஸூ முதலாக துஷ்டர் நிக்கிரகசிஷ்டபரிபாலனம்பண்ணிக்கொண்டிருப்பார்கள். அப்போது சீமையிலே சுகசோபனகலியாணமாகயிருப்பார்கள்.

மாதம் மூன்று மழைபெய்யும் பிராமணர்களுக்கு எல்லாம் நித்தியகருமங்கள் சகலமும் தாழ்ச்சியில்லாமல்நடக்கும். சிலராசாக்கள் சண்டைபண்ணுவார்கள். சண்டைபண்ணினபேர்கள் சேதப்பட்டுபோவார்கள். போனவர்கள்போக இருக்கிறவர்களும், ஐம்பத்தாறுதேசத்துராசாக்களும் நித்தியசுபசந்தோஷமாகயிருந்து வாழ்வார்கள். இந்த பாலகுமாரன் ஸ்ரீ ஹரிஓம்நமோ நாராயணமூர்த்தியாகிய ஸ்ரீ கிருஷ்ண அவதாரசித்தியாகிய ஸ்ரீ வீரபிர்மம் அவர்கள் பிறந்திருக்கிறார்கள். ஜெகத்திலே மகாபிறபல்யமாய் நடக்கும். அவருடைய மகிமையை பூலோகத்திலே சொல்லிமுடியாது இது நிச்சயம் இதற்கு சமுசயமில்லை. இந்த சுவாமியாருடைய வாக்கியத்தை யாராவது வாசித்து எழுதி பிறபல்யம் பண்ணினபேர்களுக்கு ஸ்ரீ சாம்பசிவமூர்த்தி அனுகிரகத்தினாலே பூரண ஆயிசுடையவராய் சகலசம்பத்தும் பெற்று வாழ்ந்திருப்பார்கள். இந்த மகிமையைப்பார்த்து எழுதாமல் மாறினாலும், பிறபல்யமாய் சொல்லாமல்போனாலும் மகாத்தாகிய பிரம்மஹத்திதோஷத்தையடைவார்கள் அப்படி வராதபடிக்கு இந்த பூமியின்கண்ணே யாரொருவர் எழுதிவைத்துக்கொண்டு அதற்கு மறுபிரதிசீர்மைகளுக்கு அனுப்பிவித்தார்களோ அவர்கள் தீர்க்காயுசும் அஷ்டஐஸ்வரியமும் பெற்றிருப்பார்கள். இன்னும் அவர்களுக்கு என்னபதவி என்றால் மஹாமுனீஸ்வரர்களுக்கு மோக்ஷஉபசாரஸ்தோத்திரம்பண்ணினால் எவ்வளவுபலனோ அவ்வளவு பலனிலும் அதிகமான பலன்பெற்று வாழ்ந்திருப்பார்கள். இந்தச்சரித்திரம் எவரண்டையிலிருந்தாலும் அவர்கள்காரியம்அனுகூலஜெயமாகும்.

ஓம் ஸ்ரீ வீரப்பிரமம் நமஸ்த்து.

சுபம்! சுபம்!! சுபம்!!!

**காலக்கியானம்**

முற்றிற்று.

---